[9th February 1959

SRI V. K. KOTHANDARAMAN : குடியாத்தம் தாலூக்காவில் பல கிராமங்களில் குடிதண்ணீர் கிணறு இல்லையென்று தாசில்தாரிடத்தில் நானே நேரில் பார்த்து எழுதிக்கொடுத்திருக்கிறேன். அப்படி இருக்கும் போது 'நில்' என்று சொன்னால் அது கொஞ்சங்கூட பொருத்தம் இல்லை. தயவுசெய்து உடனடியாக......

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தத் தாலூக்காவில் எட்டு கிராமங்களில்தான் கவர்ன்மெண்டால் நிர்மாணிக்கப்பட்ட கிணறு இல்லை. மற்றப்படி தண்ணிக்கு வேறு வகையில் வசதி இருக்கிறது. குடி தண்ணீர் இல்லாத கிராமங்களே இல்லையென்றுதான் சொன்னேன்.

*Import of fish*

MR. SPEAKER : கேள்வி எண் 154—அங்கத்தினர் ஸ்ரீ M. C. முத்துகுமாரசாமி அவர்கள் தன் இடத்தில் இல்லாததால் கேள்வியும் பதிலும் நடவடிக்கையில் அச்சடிக்கப்படும்.

* 154 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அந்நிய நாடுகளிலிருந்தும், நமது நாட்டின் வெளி ராஜ்யங்களிலிருந்தும் நமது ராஜ்ய எல்லைக்கு 1956–57, 1957–58 எத்தனை டன் மீன் இறக்குமதி செய்யப்பட்டுள்ளன ;

(ஆ) அவைகளின் மதிப்பீடு என்ன ?

THE HON. SRIMATHI LOUDHAMMAL SIMON : (*a*) & (*b*) A quantity of 53 tons of fish valued at Rs. 78,926 and 15·4 tons valued at Rs. 39,925 during the years 1956–57 and 1957–58 respectively were imported into this State from foreign countries. A quantity of 2,620 tons of fish valued at Rs. 14·6 lakhs and 2,510 tons valued at Rs. 14·0 lakhs were imported into this State from other States in India during the years 1956–57 and 1957–58 respectively. Fish imported from foreign countries is usually canned and smoked fish, fish pastes, crustacea and Molluscs.

*Ilandaiyadi road-cum-bridge*

* 155 *Q*.—SRI A. VEDARATHNAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலூகா புஷ்பவனம் கிராமம், இலந்தையடி ரஸ்தா பாலம் தடைப்பட்டிருப்பதன் காரணம் என்ன ?

(ஆ) எப்போது வேலை துவக்கி, எப்போது முடியும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The soil met with in the foundation under piers was of poor quality and as such further investigation has become necessary so as to have a strong foundation. Hence the work was stopped.

(*b*) The soil samples have since been got tested. Arrangements are also being made to conduct a load test in order to decide whether a revised design for the bridge will be necessary. The results of the test will be studied so as to decide the changes in the design of the bridge. The changes in the design, if found necessary will be finalised and the work resumed thereafter.

9th February 1959]

**Sri A. VEDARATHNAM** : இந்தப் பாலத்திற்கு முதலில் எஸ்டிமேட் தயார்செய்தபோது அந்த மண் சோதனை செய்யப்படவில்லையா? மண் சோதனை என்று சொல்லி இப்போது இடையில் வேலையை நிறுத்தி வைப்பதற்கு என்ன காரணம் ? எப்போது இந்தப் பாலத்தின் வேலை மறுபடியும் துவங்கி பூர்த்தியாகும் ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : முதலில் மேலே இருக்கக்கூடிய மண்ணை சோதனை செய்து அதன்பேரில் பால வேலை துவக்கப்பட்டது. ஆனால் கீழே அந்த மண்ணின் ரகம் மாறிவிட்டதன் காரணமாக அதை மீண்டும் பரிசோதனை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. அந்த பரிட்சை முடிந்தவுடன் வேலை துவக்கப்படும்.

### *Strike notice by Teachers*

* 156 Q.—**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) வடாற்காடு ஜில்லா, திருப்பத்தூர் இராமகிருஷ்ண உயர் நிலைப் பள்ளியின் ஆசிரியர்களிடமிருந்து 1958-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 27-ம் தேதி வேலை நிறுத்த நோட்டீஸ் வந்ததா ?

(ஆ) அது விஷயமாக என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (*a*) & (*b*) A notice of strike, dated 27th October 1958 was given by the teachers of the Ramakrishna High School, Tiruppattur that if their salaries due were not paid before 30th November 1958 they would go on strike from 1st December 1958. Instructions were issued by the Director of Public Instruction while releasing the grant for 1957–58 to the management of the institution, that the amount should be first utilized to discharge the liability to teachers. There has been no further complaint from the teachers.

**Sri V. K. KOTHANDARAMAN** : இது போன்று ராமகிருஷ்ண உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களிடமிருந்து எத்தனை முறை வேலை நிறுத்த நோட்டீஸ் வந்திருக்கிறது ? இப்பிரச்சனை இது போல் எத்தனை முறை தீர்க்கப்பட்டிருக்கிறது ? ஒவ்வொரு முறையும் ஐந்து மாதம், 6 மாதம் என்று ஆசிரியர்களுக்கு வழக்கம்போல சம்பளம் கொடுக்கப்படாமல் இருந்தால் அவர்கள் எப்படி வாழ்க்கை நடத்த முடியும் ? இதனால் கல்வித் தரம் வெகுவாக பாதிக்கப்படாதா ? ஆகையால் இதை மீண்டும் பரிசீலனை செய்து இந்தப் பாடசாலையை சர்க்காரே எடுத்து நடத்த முயற்சி செய்வார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இதற்கு முன்னால் ஒரு தடவை இதைப்பற்றி புகார் வந்தது என்று ஞாபகம். இப்போது நிர்வாகத்திலேயே மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்கிற விஷயம் கனம் அங்கத்தினருக்கும் தெரியும் என்று நினைக்கிறேன்.

### *Cancer Institute, Adyar*

* 157 *Q.*—**Sri K. SATTANATHA KARAYALAR** : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is nay proposal to develope the Cancer Institute, Adyar, into a modern Radium Therapy Centre?